54

# மகாபோதம்

அன்று பௌர்ணமி; ஸுஜாதை 'வெள்ளென' எழுந்திருந்து பசுவைக் கறந்து, பால் காய்ச்சிப் பாலன்னம் தயாரித்தாள். தன் காதலன் உடம்பு கலகலப்பாக ஆக வேண்டுமென்று இஷ்ட தேவதையை வேண்டித் தொழப் புறப்பட்டாள்.

ஸுஜாதை அந்த அதிகாலைப் பொழுதில் உருவெடுத்து வந்த உதயகன்னி போலவே இருந்தாள். சிவப்பு உடலில் மஞ்சள் பட்டாடை உடுத்திருந்தாள். கோவிலுக்குப் போவதால் நீராடி நெற்றிக்கிட்டுக் கொண்டு, தூய்மையே நடந்து செல்லுவது போல இருந்தாள். பாலும் இனிப்பும்போலக் கலந்து, அழகும் பருவமும், அவள் முகத்தில் தெளிவை நிரப்பின. அதில் கம்பீரமும், அமைதியும் சாந்தமும் தென்பட்டன. அவளுடைய நடையிலேயே ஓர் அடக்கமும் பெருக்கும் இருந்தது.

அவள் கோவிலுக்குப்போகும் வழியில்தான், நைரஞ்ஜரைக் கரையில் அந்த அரசமரம். அதன் அடியில்தான் சுவர்ண விக்ரகம் போன்ற போதி சத்துவ வடிவம் கல் போலச் சமைந்து, தவத்தில் இருந்தது. கண்மூடிய அந்த மோன முகத்தில் சொல்லொணாத் துயரம் தேங்கி இருந்தது. மூடியிருந்த அந்த விசாலமான கண்ணிமைகளில் என்ன சாந்தம், எவ்வளவு அமைதி! பத்மாஸனத்தில் அமர்ந்திருந்த அந்த உருவமே, அந்த இடத்தில் கோவில் கொண்டெழுந்த ஒரு ஜோதிலிங்கம் போல இருந்தது. அதைக் கண்டு கண்டு ஸுஜாதை பல நாட்களாக பிரமித்திருக் கிறாள். கிராமத்தார்கள், வழிப்போக்கர்கள் எல்லோரும் 'யாரோ தபஸ்வி, சாது!' என்று திரும்பிக்கூடப் பார்க்காமல் போய்விடுவார்கள். ஸுஜாதைக்கு மட்டும் அந்த ஒளிவடிவத்தைக் கண்ட நிமிஷ முதல், அதனிடம் ஒரு லயிப்பு ஏற்பட்டு விட்டது. கொடுமையான தவத்தில் இறங்கிய அந்த மகா துக்கத்தைக் கண்டதும், அவள் மனதில் ஒரு மகத்தான இரக்கம் சுரந்தது.

*ஹநுமான், ஆண்டுமலர், 1939*

## 2

தூரத்தில் நின்று அந்த மௌன மூர்த்தியை ஆழ்ந்து கவனித்து உருகுவாள். அசைவற்ற அந்த வலிமையைக் கண்டு பிரமித்துப் போவாள். அன்று அவள் கண்ட காட்சி அவளை மெய்ம்மறக்கச் செய்தது.

மகாபிநிஷ்கிரமணத்திற்குப் பிறகு சித்தார்த்தன் 'எத்தைத் தின்றால் பித்தம் தெளியும்' என்றது போன்ற வேட்கைகொண்டு, உண்மையைக் காண எல்லா வழிகளையும் பின்பற்றி, ஒவ்வொன்றாகப் பரீக்ஷை பார்த்தார். நாடு, வீடு, மனைவி, மகன், பந்துக்களைத் துறந்தது முதல் வழி; ஆபரண அலங்காரங்களைத் துறந்தார்; தம் உடைவாள் கொண்டு தம் சிகையை அறுத்துக்கொண்டார். ஆகாராதிகளைக் குறைத்து நியமத் திற்குக் கொண்டு வந்தார்; தாபஸர்களைத் தேடிச் சென்று அவர்களுடன் பழகிப் பார்த்தார். எங்கும் உண்மையைக் காணோம். எங்கும் அகங்காரம், காமம், மமதை, குரோதம் முதலியன மண்டிக் கிடந்தன.

அலைந்து அலைந்து பார்த்துக் களைத்துப் போய், ஸத்சங்கத்தில் கூடத் தெளிவு ஏற்படாதது கண்டு, வெறுப்புற்று, சித்தார்த்தன், கடைசி யாக நைரஞ்ஜரைக் கரையில் ஒரு அரச மரத்தடியில் உட்கார்ந்து விட்டார். இருபத்தெட்டு நாள் அல்லும் பகலுமாக, அந்த மரத்தடியில் உட்கார்ந்த வண்ணம் யோசனை செய்தார். அறிவுத்தாகம் மேலிட்டு மெய்ம்மறந்தார். உண்மையை அறிய வேண்டும் என்ற ஆவேசம் மேலிட்டு, மூச்சையும் பேச்சையும் நிறுத்தினார். இருபத்தெட்டு நாட்களில் உடல் இளைத்து காஷ்டம் போல ஆயிற்று. ஆனால் அப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாக அறிவு தெளிவாகிக்கொண்டு வந்தது. நெருப்பின் மேல் இருக்கும் சாம்பல்போல, உடல் சதை அகல அகல, உள் ஜோதி விளக்கம் கொண்டது. சரீரம் இளைக்க இளைக்க, ஞானம் பெருகிற்று.

அப்பொழுது தான் அவருக்கு ஓர் ஒளி தெரிந்தது. எங்கெங்கோ தேடித் திரிந்த உண்மையை, அங்கேயே, தனதுள்ளேயே காணலாம் என்று ஊகம் செய்ய முடிந்தது முதல்முதலாக.

இருபத்தொன்பதாம் நாள் காலையில் உதயத்தின் ஒளியோடு ஒளி மங்கையாக ஸுஜாதை வந்தாள்.

## 3

அவள் ஓர் இடைப் பெண். பலனென்னும் இடையனின் மகள். இஷ்ட தேவதைக்குப் படைப்பதற்கான பாலன்னம் அவள் கையில் இருந்தது.

அன்று சாக்கிய முனியின் சுத்தத் தவவடிவம் அவள் மனதை விசேஷ மாகக் கொள்ளை கொண்டது. மெலிந்து போன அந்த மேனியை அன்று கண்டதும் அதனிடம் ஒரு மகா ப்ரேமை கொண்டாள் அவள். மட்டற்று அவள் உள்ளத்தில் சுரந்த இரக்கம் அன்று கட்டு மீறிற்று.

காதலனை மறந்தாள் ஸுஜாதை. தன் நிலையை மறந்தாள்; வழிபடும் கடவுளையே மறந்தாள். வேற்றுமையையும் மறந்தாள். இருபத்தெட்டு நாள் உபவாஸத்தால் வாடிச் சோர்ந்துபோன அந்த இளம் முகத்தைக் கண்டு இளகினாள். திடீரென்று அருகிற் சென்று, தைரியமாக பாலன்னத்தை எடுத்துத் தன் கையாலேயே குழந்தைக்கு ஊட்டுவதுபோல ஊட்டினாள். அந்த அன்னத்துடன் ஸுஜாதை புத்தனுக்கு மகா போதத்தையும் ஊட்டினாள்.

ஒளி கொண்டுவந்த அந்த உத்தம ஸ்வரூபத்தினிடமே அவர் உண்மையைக் கண்டார். பிரேம பூரிதமான அந்த தயை உருவம், துக்க நிவாரணத்தையே முடிவாகக் கொண்ட சத்திய சதுஷ்டயத்தைப் பளிச் சென்று அவருக்கு விளக்கிக் காட்டிற்று.

ஆமாம்! துக்கம் ஓர் உண்மை. அதன் காரணமான துக்கோற்பத்தியும் உண்மை: அதன் பலனான துக்க பரம்பரையும் உண்மை. துக்க நிவாரணம் இந்தத் தொடர்பின் முடிவு. அதுவும் உண்மையாகத்தான் இருக்க வேண்டும்.

ஸுஜாதை புத்தனுக்கு அதைத்தான் விளக்கினாள்.

பிறப்பு இறப்புக்களிலிருந்து துக்கத்தைப் பிரித்து எடுக்க முடியாது. வாழ்க்கையில் துக்கக் கலப்பற்ற ஆனந்தம் என்பது இருக்க முடியாது. எனவே உண்மையை அறிந்தவர்களுக்கு துக்க நிவாரணம் என்ற ஒரு மார்க்கம்தான் இருக்கிறது.

ஜீவகாருண்யமும் அஹிம்ஸையும் தான் புத்தன் கண்டறிந்த தத்துவத்தின் சாரம்.

ஸுஜாதை ஊட்டிய அன்னம் புத்தனுடைய சோர்வை அகற்றித் தெளிவு கொடுத்தது. கண்களைத் திறந்து பார்த்தார். ஸுஜாதையைக் கண்டு ஆத்மசாந்தி பெற்றார்.

அன்பே அவர் முன் நின்றதுபோல் நிம்மதி அடைந்தார். அன்பு வெற்றி அளிக்கும்: அன்பு பிறப்பின் தோல்வியை அகற்றும். அன்பு அன்னம்; அன்பு உயிர்.

சித்தார்த்தன் தவத்திலிருந்து துள்ளி எழுந்தார்; போதி சத்துவ ஸ்வரூபமாக வெளியேறினார். அன்பென்ற அதிசய சமயத்தைப் புகட்டக் கிளம்பினார். உலகம் ஒரு முகமாக எழுந்து அவரைப் பின் பற்றிற்று.

●